இப்பகுதியில் எதனையும் எழுதுதல் ஆகாது.

(D) தாழ்நாட்டு ஈரவலயத்துக்கெனத் திட்டமிடப்பட்ட பொலித்தீன் கூடாரம் பின்வரும் உருவில் காட்டப்பட்டுள்ளது. வினா (i) - (iii) வரை விடையளிப்பதற்கு இதனைப் பயன்படுத்துக. P, Q, R ஆகியவற்றுக்குப் பொருத்தமான மறைப்புப் பதார்த்தங்களைப் (Covering materials) பெயரிடுக.




(i) P : பூச்சி தடை வலை (2)

(ii) Q : ஊதா கடந்த கதிர்களுக்கு தடையான பொலித்தீன் (2)

(iii) R : பூச்சி தடை வலை (2)

(E) அண்மையில் இலங்கையரிடையே பசுந்தேயிலை (Green tea) பிரபல்யமடைந்து வருகிறது.

(i) பசுந்தேயிலை பிரபல்யமடைவதற்கான பிரதான காரணத்தைக் குறிப்பிடுக. (3)

கொழுப்பினை தகனமடையச் செய்தல்/கொலஸ்திரோலை குறைத்தல்/ஆரோக்கியத்துக்கு விரும்பத்தக்கது

(ii) கருந்தேயிலை (Black tea), பசுந்தேயிலை ஆகியவற்றைத் தயாரிக்கும் செயன்முறைகளுக்கு இடையிலான **இரண்டு** பிரதான வேறுபாடுகளைப் பட்டியலிடுக.

(1) பசுந் தேயிலைக்கு நீராவி செலுத்துவதன் மூலம் நொதியத் தொழிற்பாட்டினை செயலிழக்கச் செய்தல் (3)
கறுப்புத் தேயிலைக்கு அவ்வாறு செய்வதில்லை

(2) கறுப்பு தேயிலைக்கு அரைத்தலின் பின்னர் நொதிக்க விடப்படும். பசுந்தேயிலைக்கு அவ்வாறில்லை (3)

(F) இறப்பர் உற்பத்திப் பொருட்களைத் தயாரிக்கும்போது மேற்கொள்ளப்படும் வல்கனைசுப்படுத்தல் (Vulcanization) என்றால் என்ன?

றப்பருக்கு சல்பர் சேர்ப்பதன் மூலம் உறுதித்தன்மையை அதிகரித்தல் (3)

(G) குறித்தவொரு சேவை நிலையத்தின் பாதுகாப்பு ஆய்வின்போது, ஆய்வுக் குழுவினால் பின்வரும் சிபாரிசுகள் மேற்கொள்ளப்பட்டன. இடர் தவிர்ப்புத் தலைமையொழுங்கிற்கு அமைய ஒவ்வொரு சிபாரிசுக்குமுரிய வகுதியைக் குறிப்பிடுக.

| சிபாரிசு | வகுதி |
|---|---|
| (i) செயற்படாத பழைய குதை அடிகளை (plug base) புதிய குதை அடிகளின் மூலம் மாற்றீடு செய்தல் | அவதானமாக அகற்றுதல் (2) |
| (ii) களஞ்சிய அறைக்கென வெளியகற்று விசிறியைப் பொருத்துதல். | இயந்திரவியல் நடவடிக்கைகளை எடுத்தல் (2) |
| (iii) களஞ்சியத்தில் வைக்கப்பட்டுள்ள இரசாயனப் பதார்த்தங்களுக்கு லேபலிடல் | நிர்வாக நடவடிக்கைகளை எடுத்தல் (2) |

இப்பகுதியில் எதனையும் எழுதுதல் ஆகாது.

(H) செல்வந்தரொருவர் குறிப்பிட்டதொரு இடத்தில் பண்ணையொன்றை நிறுவுவதற்கு உத்தேசித்துள்ளார். அவர் விவசாயம் தொடர்பான பயிற்சியையோ அறிவையோ கொண்டவர் அல்லர் எனினும் அந்தப் பிரதேசத்தில் திறமையான விவசாய விரிவாக்க அலுவலர் ஒருவர் உள்ளாரென அறிந்துள்ளார். மேலும், விடயங்களை ஆராய்ந்தபோது அண்மையில் விவசாய விளைபொருட்களுக்கான சந்தையும் வெற்றிகரமான பண்ணையொன்றும் உள்ளதையும் அவர் அறிந்துகொண்டார்.

(i) மேற்படி தகவல்களுக்கு அமைய பபசஅ (SWOT) பகுப்பாய்வு மேற்கொள்ளப்பட்டிருப்பின், அது தொடர்பில்,

(1) பலம் ஒன்றைப் பெயரிடுக. செல்வந்தராக இருத்தல் (2)

(2) பலவீனம் ஒன்றைப் பெயரிடுக. விவசாயம் தொடர்பான பயிற்சியையோ அறிவையோ கொண்டிராமை (2)

(3) சந்தர்ப்பமொன்றைப் பெயரிடுக. விவசாய விரிவாக்க அலுவலர் இருத்தல், விளைபொருட்களுக்கான சந்தை இருத்தல் (2)

(4) அச்சுறுத்தலொன்றைப் பெயரிடுக. வெற்றிகரமான பண்ணை ஒனறு அண்மையில் இருத்தல் (2)

(ii) மேலே (i) (2) இல் குறிப்பிட்டவாறு அவரால் இனங்காணப்பட்ட பலவீனத்தை எவ்வாறு நீக்கலாமெனக் குறிப்பிடுக.

விவசாய விரிவாக்க அலுவலரை பயன்படுத்துதல் / அவரிடமிருந்து பயிற்சியைப் பெறல் (3)

Q. 4

75

※ ※

# பகுதி B - கட்டுரை

05. (a) உயிர்முறைமைகளில் மண் நுண்ணங்கிகளின் முக்கியத்துவத்தை விவரிக்குக.

மண்ணில் காணப்படுவதும் வெற்றுக் கண்ணுக்குப் புலப்படாததும் 0.1 mm (100 μ m) உடற் பருமனிலும் குறைந்த உயிரங்கி வகை ஆகும்.

01. சேதனப் பதார்த்தங்களின் பிரிகை அடையச் செய்வதன் மூலம் சிக்கலான மூலக்கூறுகளை எளிய மூலக்கூறுகளாக மாற்றுதல்.
02. மண்ணில் போசணை அடக்கத்தை அதிகரித்தலும் போசணைக் கூறுகளின் மீள் சுழற்சியும்.
 உதா :
 1. அமோனியாவாக்கம்
 பற்றீரியாக்கள் மலக்கழிவுகளில் உள்ள $NH_3$ இனை $NH_3{}^+$ ஆக மாற்றுதல்.
 2. நைத்திரேற்றாக்கும் பற்றீரியாக்களினால் $NO_3^-$ ஒட்சியேற்றப்பட்டு $NH_3$ அல்லது $NH_4{}^+$ ஆக தாவரங்கள் அகத்துறிஞ்சப்படும் வகையில் மாற்றுதல்.
 3. நைதரசன் இறக்கச் செய்யும் பற்றீரியாக்கள் மூலம் வளிமண்டலத்துக்கு $N_2$ வாயுவாக விடுவித்தல்.
03. சேதனப் பதார்தங்களைப் பிரிகையடைச் செய்தல் மூலம் சூழற் சமனிலையைப் பேணல்.
04. தாவரத்தைச் சேதப்படுத்தும் நோய் உண்டாக்கும் நுண்ணங்கிகளில் இருந்து தாவரத்தைப் பாதுகாத்தல்.
05. மண்ணின் வளத்தைப் (Fertility) பேணுதல்
 உதா : 1. கூட்டெரு தயாரிப்பு
 2. உயிரிப் பசளை தயாரிப்பு
 3. உயிரியற் பீடைநாசினி உற்பத்தி
06. மண்ணுக்கு சேதனப் பதார்ததங்கள் சேர்த்தல் (அல்கா போன்றவை இறந்தவுடன்)
07. மண் துணிக்கைகளை பிணைத்தல் (Cementting) அதனால் மண்ணரிப்பு குறைக்கப்படும். மண் கட்டமைப்பு விருத்தி அடையும்
08. மண்ணில் காணப்படும் மாசுக்கள் பிரிகையடையும்.
09. மண்ணில் தேக்கப்படும் நீரின் அளவு அதிகரிக்கும்.
10. பாறைகள் மற்றும் கனியங்கள் வானிலையலழிதலுக்கு உதவும். மண் கட்டமைப்பு உருவாகும்.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 08 x 03 புள்ளி =24 புள்ளிகள்**
**விடயங்களை விவரித்தல் 08 x 07 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

05. (b) நிலஅளவையின்போது சங்கிலி அளவை முறை பயன்படுத்தப்பட **முடியாத** சந்தர்ப்பங்களை விவரிக்குக.

**சங்கிலி நிலஅளவை**

ஏகபரிமாணத் தூரங்களை மாத்திரம் பயன்படுத்தி காணி ஒன்றினை சங்கிலி மூலம் அளந்து, முக்கோணிகளாக பிரித்து அதன் பரப்பளவைக் காணும் முறை சங்கிலி அளவை முறை எனப்படும்.

**பயன்படுத்த முடியாத சந்தர்ப்பங்கள்**

1. சாய்வான அல்லது மலைப்பிரதேசங்களில் அளப்பது கடினமாகும்.

2. பாரிய அளவிலான இடங்களை அளப்பதற்கு தளக்கோடு இடுவதற்கான இடம் மட்டுப்படுத்தப்பட்டுள்ளமை.

3. தரவுகளை அதிகமாகவுள்ள இடங்கள் கிடைத்தூரம் மற்றும் குத்தளவுகளை எடுப்பதில் சிரமமும் அதிக நேரமும் எடுக்கும்.

4. இரண்டு புள்ளிகளுக்கு இடையிலான கிடைத்தூரங்களை அளவிடுவது கடினமான சந்தர்ப்பத்தில் அளக்கும் இடங்களுக்கிடையில் தடைகள் மற்றும் தூரம் அதிகமாக இருப்பின் அளப்பது கடினமாகும்.

5. காடுகள் சார்ந்த பிரதேசங்களை அளக்கும் போது தளக்கோட்டை வரைந்து கிடைத்தூரங்களை பெற்றுக் கொள்வதில் சிரமங்கள் ஏற்படும்.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 04 x 06 புள்ளி =24 புள்ளிகள்**
**விடயங்களை விவரித்தல் 04 x 14 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

05. (c) பழங்களைப் பதப்படுத்தும் தொழிற்சாலையிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுநீரின் துணைப் (இரண்டாம் நிலை) பரிகரிப்புச் செயன்முறையை விளக்குக.

**கழிவுநீர் துணைபரிகரிப்பு முறை**

காற்றுள்ள பற்றீரியாக்களை பயன்படுத்தி கழிவு நீரில் கலக்கப்பட்டுள்ள சேதன பதார்த்தங்களை பிரிகையடையச் செய்வதாகும்.

**கழிவுநீர் பரிகரிப்பு செயன்முறை**

01. காற்றூட்டல் தொட்டிகளினுள் காற்றுவாழ் பற்றீரியாக்களின் குடித்தொகையினை அதிகரித்தல்.
   - அடைதல் தொட்டியில் படிந்துள்ள பற்றீரியா அடங்கிய மண்டியில் சிறிதளவு காற்றூட்டல் தொட்டிக்கு அனுப்பப்படும்.
   - காற்றூட்டம் செய்யப்படும்.

02. காற்றூட்டல் தொட்டியினுள் சேதன பதார்த்தங்கள் பற்றீரியாவினால் பிரிகையடைதல்
   - சேதனப் பதார்த்தங்கள், $CO_2$, நீர் மற்றும் நுண்ணங்கிகளுக்கு தேவையான சக்தியாக பிரிகையடைய செய்யப்படும்.

03. ஏவப்பட்ட மண்டி உருவாக்கப்படல்
   - பெருகும் பற்றீரியா குடித்தொகை நீரில் தொங்கல் நிலைக்குள்ளாகி திரளுருவாக ஏவப்பட்ட மண்டி உருவாக்கப்படும்.

04. துணை வீழ்படிவு தொட்டிக்கு அனுப்பப்படுதல்
   - இங்கு நீரில் வாழும் பற்றீரியா திரளுரு துணை வீழ்படிவு தொட்டிக்கு அனுப்பப்பட்டு துணை அடையல் மண்டியாக படியும்.

05. துணை அடையல் மண்டி அகற்றப்படல்
   - அம்மண்டியில் ஒரு பகுதி காற்றூட்டல் தொட்டிக்கு திரும்ப அனுப்பப்படுவதுடன் இன்னொரு பகுதி காற்றின்றிய நிலைமையின் கீழ் பிரிகையடைய செய்து உயிர்வாயு உற்பத்தி செய்யப்படும்.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 05 x 06 புள்ளி =30 புள்ளிகள்**
**விடயங்களை விவரித்தல் 05 x 10 புள்ளி =50 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

06. (a) சந்தைக்கெனத் தயார்செய்யப்படும் நாற்றுகள் கொண்டிருக்க வேண்டிய தர நியமங்களை விவரிக்குக.

களத்தில் நடுவதற்கு முன்பு பொருத்தமான வயது வரை நாற்றுமேடையில் வளர்த்து பராமரிக்கும் பயிர்கள் நாற்றுக்கள் எனப்படும்.

**நாற்றுக்கள் கொண்டிருக்க வேண்டிய தர நியமங்கள்**

01. களத்தில் நடுவதற்கு பொருத்தமான விதத்தில் வன்மைப்படுத்துதல் வேண்டும்.
களத்தில் காணப்படக்கூடியநிலைமைகளை தாங்கக்கூடிய விதத்தில் பயிர்களை வன்மைப்படுத்தல் வேண்டும்.

02. பீடை தாக்கங்கள் அற்றது.
நாற்றுக்கள் பூச்சி சேதம் அல்லது நோய்ச் சேதம் அற்றவையாக இருத்தல்.

03. பிரதேசத்திற்கு பொருத்தமான விதத்தில் நியம வளர்ச்சி நிலைமையில் காணப்படல்.
பயிரின் இலைகளின் எண்ணிக்கை, உயரம், தண்டின் விட்டம், வேர்த்தொகுதியின் வளர்ச்சி என்பன நியம அளவில் காணப்பட வேண்டும்.

04. ஓரின தாவர சமுதாயத்திற்கு ஓரே வளர்ச்சியளவு காட்டப்படல்
ஓரே இனத் தாவரங்கள் ஓரே உயரத்திலும் மற்றும் ஓரே அளவிலும் காணப்பட வேண்டும்.

05. சாடிக்கு வெளிப்புறமாக வேர்கள் வளர்ச்சியடையாது இருத்தல்.
சாடி நாற்றுக்களில் வேர்கள் சாடிக்கு வெளியே வளர்ந்திருக்கக் கூடாது.

06. தெளிவான அறிக்கைகளை அல்லது சுட்டிகளைக் கொண்டிருத்தல்
- சுட்டியில் தாவர இனம், ஒட்டு செய்யப்பட்ட தாவரமாயின் ஒட்டிய திகதி குறிப்பிடல் வேண்டும்.
- பசளை இட்ட தினம், வயது, பீடைநாசினி தெளித்த திகதி, இடப்பட்ட பசளை வகைகள் மற்றும் பீடைநாசினிகள் தொடர்பான அறிக்கைகள் இருத்தல் வேண்டும்.

07. களைகள் காணப்படாமல் இருத்தல்.
சாடி நாற்றுகளில் சாடிகளினுள் அல்லது சாடிகளுக்கு வெளியே களைகள், அல்கா வகைகள் அற்றதாக இருத்தல்.

08. தாய்தாவரத்தை ஒத்த இயல்புகளை கொண்டிருத்தல்.
நாற்றின் இயல்புகள் தாய்த் தாவரத்தை (இலையின் வடிவம், இலையின் நிறம், இலையின் நரம்பமைப்பு, பூவின் நிறம் மற்றும் வடிவம்) ஒத்த இயல்பாக காணப்பட வேண்டும்.

09. இலைகளில் புள்ளிகள், நிற மாற்றங்கள் போன்றவை இல்லாதிருத்தல்.
இலைகளில் புள்ளிகள், நிறம் மாற்றடையாமல் இருப்பதுடன் தாவரங்கள் ஆராக்கியமாக இருப்பது உறுதிப்படுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| **அறிமுகம்** | **20 புள்ளிகள்** |
| **தர நியமங்களுக்கு 05 x 06 புள்ளி** | **=30 புள்ளிகள்** |
| **தரநியமங்களை விவரித்தல் 05 x 10 புள்ளி** | **=50 புள்ளிகள்** |
| **மொத்தம்** | **= 100 புள்ளிகள்** |

06.(b) உணவுக்கான பல்லின மீன்வளர்ப்பின் (Polyculture) அனுகூலங்கள், பிரதிகூலங்களைக் குறிப்பிடுக.

**அறிமுகம்**

பல்லின மீன் வளர்ப்பு என்பது மீன் வகைகள் சிலவற்றை ஓரே வளர்ப்பு தொகுதியில், ஒரே சந்தர்ப்பத்தில் வளர்ப்பு செய்தலாகும்.

| அனுகூலங்கள் | பிரதிகூலங்கள் |
|---|---|
| 01. குளத்தின் எல்லா நீர்ப்படைகளையும் பயன் படுத்தல். | 01 ஊனுண்ணி மீன்கள் இம்முறையில் வளர்ப்புச் செய்ய முடியாது. |
| 02.உணவு மற்றும் இடத்திற்கான போட்டி குறையும். | 02.வளர்ப்பு செய்யும் எல்லா மீனினங்கள் தொடர்பாகவும் அறிவு காணப்பட வேண்டும். |
| 03.இயற்கை வளங்களின் மூலம் உயர்ந்த பயன்களை பெறமுடிதல். | 03.நீரின் தரம் பற்றி நிதமும் அவதானமாக இருத்தல் வேண்டும். வெவ்வேறு மீனின் |
| 04.குறைந்த இடப்பரப்பில் அதிக இலாபம்பெற்றுக் கொள்ளலாம். | வகைகள் இருப்பதனால் 04.அறுவடை செய்யும்போது, அறுவடை பருவத்து |
| 05.மட்டுப்படுத்தப்பட்ட இடத்தில் வளர்ப்பு செய்யலாம். | அமையான மீன்வகைகளும் அகப்படுவதால் பௌதீக சேதங்கள் ஏற்படலாம். |
| 06. அச்சுறுத்தல்கள் குறைவாக இருக்கும். | 05.ஒன்றாக வாழ பொருத்தமான மீனினங்கள் |
| 07.பல்வேறு வகையான புரத உணவுகளைப் பெற்றுக் கொள்ளலாம். | தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். |

**அறிமுகம்** 20 புள்ளிகள்
**அனுகூலங்கள் 04 x 10 புள்ளி** = 40 புள்ளிகள்
**பிரதிகூலங்கள் 04 x 10புள்ளி** = 40 புள்ளிகள்
**மொத்தம்** = 100 புள்ளிகள்

06.(c) கால்நடை உற்பத்தியில் நவீன தொழினுட்பங்களைப் பயன்படுத்துவதன் முக்கியத்துவத்தை விவரிக்குக.

கால்நடை உற்பத்தி நவீன தொழினுட்பம் என்பது விலங்கு உற்பத்திகளின் தரத்தினை மற்றும் அளவினையும் அதிகரித்து, வினைத்திறனையும் அதிகரித்து மற்றும் செயற்பாடுகளை இலகுவாக்குவதற்காக பயன்படுத்தும் நவீன முறைகளாகும்.

**விலங்குமனை தொடர்பானது**

1. விலங்கு மனையினுள் வெப்பநிலை, ஈரப்பதன், ஒளி போன்ற காரணிகளை உணரிகளைப் பயன்படுத்திக் கட்டுப்படுத்தல்.

2. விலங்குகளுடைய உடற்பயிற்சி செயற்பாடுகள் முறையாக நடைபெறுவதால் உயர்ந்த உற்பத்திகளைப் பெற்றுக்கொள்ளலாம்.

3. கோழி மனைகளில் ஒளியின் காலஅளவை அதிகரிப்பதன் மூலம் முட்டை உற்பத்தியை அதிகரிக்கலாம்.

**உணவு வழங்கலுடன் தொடர்பானது**

1. தன்னியக்கமாக உணவு மற்றும் நீர் ஆகியன வழங்கப்படல். மற்றும் தேவையான போது உணவு வழங்கப்படுவதால் உணவு வீண் விரயம் ஏற்படுவதில்லை.

2. உணவு உற்பத்தியில் பௌதிக தன்மையான துண்டுகள், வில்லைகள் போன்ற வடிவத்தில் உணவினை வழங்குவதனால் உணவு வீண்விரயம் தவிர்க்கப்படும்.

3. விலங்குகளின் வெவ்வேறு அவத்தைகளுக்கு பொருத்தமானவாறு போசணை உள்ளடக்கம் அடங்கிய உணவு அட்டவணை படி தயாரிப்பதனால் விலங்குகளின் வளர்ச்சி மற்றும் தொழிற்பாடு சிறந்த முறையில் நடைபெறுவதோடு, இதன் மூலம் சிறந்த உற்பத்தியையும் பெற்றுக் கொள்ள முடியும்.

4. உயர் தொழினுட்ப முறையை பயன்படுத்தி உணவு உற்பத்தி செய்யப்படுவதனால் தூய உணவினைப் பெற்றுக் கொள்ளலாம்.

**விலங்கு உற்பத்தி தொடர்பானது**

1. தன்னியக்க பால் கறக்கு இயந்திரத்தை பயன்படுத்துவதனால் அதிக பாலினை குறைந்த காலத்தினுள் தூய முறையில் பெற்றுக் கொள்ள முடியும்.

2. பொறிமுறையாக்கத்தின் மூலம் இறைச்சி உற்பத்திச் செயற்பாடு நடைபெறுவதால் வினைத்திறனாக மற்றும் நியம தரத்திற்கு உற்பத்திகளை பெற்றுக் கொள்ளலாம்.

**இனப்பெருக்க வினைத்திறனை மேம்படுத்தல் தொடர்பானது**

1. செயற்கை சினைப்படுத்தல் மூலம் சிறந்த இயல்புகளைக் கொண்ட கன்றுகளை பெற்றுக் கொள்வதால் உயர்ந்த உற்பத்தியை பெற்றுக்கொள்ளலாம்.

2. வேட்கைக்கால ஒருமுகப்படுத்தல் மூலம் ஓரே காலத்தில் கன்றுகள் பலவற்றைப் பெறமுடியும்.

3. இலிங்க நிருணயம் மூலம் பெண் கன்றுகளை உருவாக்குவதனால் பாலலூற்பத்தியை அதிகரிக்கலாம்.

4. ரேடியோ சமிக்ஞைகள் மூலம் வேட்கைக்கு வந்த விலங்குகளை இனம்காண முடியும்.

5. RFID மூலம் விலங்குகளின் வெவ்வேறு நடத்தைக் கோலங்களை இனம் காண முடியும்.

**சுகாதாரத்தை வழங்கள் தொடர்பானது**

1. தன்னியக்க தூரிகை மூலம் விலங்குகளின் குருதி சுற்றோட்டத்தை அதிகரித்தல், தோலினை சுத்தப்படுத்தல் மூலம் வினைத்திறனை அதிகரித்தல்.

2. நீர்ப்பீடன வேலைத்திட்டம் மூலம் ஆரோக்கியத்தை பேணலாம்.

3. பல வேலைகள் பொறிமுறைப்படுத்தப்பட்டிருப்பதால் உழைப்பு பயன்படுத்துவதில் சிரமம் ஏற்படாது.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 08 x 03 புள்ளி =24 புள்ளிகள்**
**விடயங்களை விவரித்தல் 08 x 07 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

**(மேற்காட்டப்பட்டவாறு விடயங்களை வகைப்படுத்தி காட்டப்படுவது எதிர்பார்க்கப்படவில்லை)**

07.(a) உணவுக் கைத்தொழிலில் பயன்படுத்தப்படும் நவீன உணவு நற்காப்பு நுட்பமுறைகளின் அனுகூல, பிரதிகூலங்களைக் குறிப்பிடுக.

**அறிமுகம்**

நவீன தொழிநுட்ப முறைகள் பயன்படுத்துவதன் மூலம் உணவினுடைய போசணையளவு, இழையமைப்பு, சுவை மற்றும் தோற்றம் ஆகிய தர இயல்புகள் கெடாத விதத்தில் மாற்றமடையாது பேணுதலும், உணவு பழுதடைவதில்தாக்கம்செலுத்தும்காரணிகளைசெயற்கையாககட்டுப்படுத்தி இழப்பினைதடுத்து உணவினுடைய ஆயுட்காலத்தை அதிகரிக்கும் செயன்முறைகள் நவீன உணவு நற்காப்பு நுட்பமுறைகள் எனப்படும்.

**நவீன உணவு நற்காப்பு நுட்பமுறைகளின் அனுகூலங்கள்**

1. சாதாரண உணவு நற்காப்பு முறைகளுடன் ஒப்பிடுகையில் உயர்ந்த போசணை பெறுமானம் பேணப்படல்.
   - உணவு உயர் அமுக்க பதப்படுத்தலில் (Hight pressure processing) குறைந்த வெப்பநிலை நிலைமைகளின் கீழ் நுண்ணங்கிகள் அழிக்கப்படல் மற்றும் நொதியங்களை செயலிழக்க செய்தல் நீரினால் உயர்அமுக்கம் ஏற்படுத்தப்பட்டு, உயர் வெப்பநிலையில் அழியக்கூடிய போசணைப் பெறுமானங்கள் பாதுகாக்கப்படும்.
     உதா : விற்றமின் C
   - மின் துடிப்பாக்கல் வெப்பபடுத்தும் முறையில் உணவானது வெப்பப்படுத்தப்படாமல் உயர் மின்னமுத்தம் கொண்ட மின் துடிப்பினை (Pulse electric heating) உணவினூடு அனுப்புவதன் மூலம் நுண்ணங்கி அழிக்கப்படுவதோடு வெப்பத்தினால் அமைப்பழியக் கூடிய போசணைகள் பாதுகாக்கப்படும்.
   - மென்சவ்வு வடித்தல் மூலம் உணவு நற்காப்பு செய்வதன் மூலம் மிகச் சிறிய துளைகள் உள்ள வடிகளினால் தொங்கல் நிலைப் பொருட்களும் நுண்ணங்கிகளுமத் வடித்து நீக்கப்படுவதோடு வெப்பத்துக்கு உணர்திறன் காட்டும் போசணை உணவினுண் பாதுகாக்கப்படும்.

2. சாதாரண உணவு நற்காப்பு முறைகளை விட குறைந்த காலத்திற்குள் தயாரிக்க முடியும் (உற்பத்தி வினைத்திறன் அதிகம்)
   - மின்துடிப்பாக்கல் வெப்பப்படுத்தல் முறை மூலம் உணவு நற்காப்பு செய்யப்படும் போது ஒரு செக்கனிலும் குறைந்த நேரத்தில் உணவினுள் உயர் மின்னமுத்தம் கொண்ட துடிப்புக்கள் அனுப்பப்படுவதோடு மிகவும் குறைந்த காலத்திற்குள் உணவு நற்காப்பு செய்யப்படும்.

3. உணவு நற்காப்பு செயன்முறைக்கு செலவிடும் சக்தி குறைவாகவுள்ளது.
   - உயர் அமுக்கப்படுத்தல், மின் துடிப்பு வெப்பப்படுத்தல் மற்றும் மென்சவ்வு வடித்தல் போன்றவற்றிற்கு பயன்படும் சக்தி ஏனைய முறைகளுடன் ஒப்பிடுகையில் குறைந்தளவாகும்.

4. சுகாதாரப் பாதுகாப்புடைய உணவு உற்பத்தியை பெற்றுக் கொள்ள முடியும்.

5. இரசாயன உணவு நற்காப்பு முறைகள் போல் அல்லாது இங்கு இரசாயனப் பதார்த்தங்கள் பயன்படுத்தப்படுவதில்லை

**பிரதிகூலங்கள்**

1. அதிக மூலதனம் தேவைப்படல்

   - நவீன உணவு நற்காப்பு முறைகளினை நிறுவ விலை அதிகமான இயந்திரங்கள் மற்றும் உபகரணங்கள் பயன்படுத்த வேண்டியுள்ளது.

2. பயிற்சி மற்றும் ஆலோசனைத் சேவைகள் தேவைப்படும்

   - நவீன உணவுத் தொழிநுட்பத்தைப் பயன்படுத்துவதால் அது தொடர்பிலான அறிவினையும் பயிற்சியையும் வழங்குவதற்கு வழிகாட்டல் ஆலோசனைத் தேவைகள் தேவைப்படும்.

3. ஆரம்ப மூலப்பொருட்களில் காணப்பட்ட போசணை உள்ளடக்கங்கள், போசணை வகைகள் மாறக்கூடியது.

4. சரியான பொதியிடல் மற்றும் களஞ்சிய நிலைமைகள் இல்லாமையினால் மோசமான சுகாதாரப் பிரச்சினைகள் ஏற்படலாம்.

| | |
|---|---|
| **அறிமுகம்** | **20 புள்ளிகள்** |
| **அனுகூலங்கள் 04 x 03 புள்ளி** | **=12 புள்ளிகள்** |
| **அனுகூலங்களை விவரித்தல் 04 x 07 புள்ளி** | **=28புள்ளிகள்** |
| **பிரதிகூலங்கள் 04 x 03 புள்ளி** | **=12 புள்ளிகள்** |
| **பிரதிகூலங்களை விவரித்தல் 04 x 07 புள்ளி** | **=28புள்ளிகள்** |
| **மொத்தம்** | =100 **புள்ளிகள்** |

07.(b) ஆளுகைத் தாவர இல்லத்துக்குப் பொருத்தமான வேயும் பொருட்ளைத் தெரிவுசெய்யும்போது கவனத்திற்கொள்ள வேண்டிய காரணிகளை விவரிக்குக.

**அறிமுகம்**

பயிர்கள் வளர்க்கப்படும் சூழல் பயிர்களுக்கு மிகவும் பொருந்தும் விதத்தில் அமைவதற்கு நிருமாணிக்கப்பட்டுள்ள இல்லமே ஆளுகைத் தாவர இல்லம் எனப்படும்.

**வேயும் பொருட்களை தெரிவு செய்யும்போது கவனிக்க வேண்டிய காரணிகள்**

01. கழியூதாக் கதிர்களுக்கு எதிர்ப்புத் தன்மையுடையதாக (Ultra violet resistance) இருத்தல்.
கழியூதாக் கதிர்களின் மூலம் ஏற்படக்கூடிய ஒளிச்சேதம் குறைக்கப்படுவதினால் வேயும் பொருட்களின் ஆயுட்காலம் அதிகரிக்கும்.

02. கூரை வேய்ந்த பின்னர் இரவில் குளிர்ச்சியடையும்போது நீர்த்துளிகள் பொலித்தீன் மேற்பரப்பில் தங்கியிராத நிலைமை (Antidrip charactor)
நீர்த்துளிகள் தேங்கி நிற்காததால் அதில் இலைக்கனின் வளர்ச்சி குறைவதோடு, வேயும் பொருட்களின் ஒளி ஊடுருவும் தன்மை பேணப்படும்.

03. கட்டமைப்பை வேய்ந்த பின்னர், பயிர்களுக்கு பிரயோகிக்கப்படும் இரசாயனப் பதார்த்தம் (சல்பர்) மூலம் ஏற்படக்கூடிய சேதம் ஏற்படாதிருத்தல்.
பயிர்களுக்கு பிரயோகிக்கப்படும் விவசாய இரசாயன பதார்த்தங்களுக்கு எதிர்ப்புத்தன்மை காண்பிப்பதால் வேயும் பதார்த்தங்களின் ஆயுட்காலம் அதிகரிக்கும்.

04. மென் மூடுபனி (Anti mist) படியாத மற்றும் தூசு பிடிக்காத (Anti dustt) தன்மை உடையதாக இருத்தல்.
மென்மூடுபனி படியாமல் மற்றும் தூசு பிடிக்காமல் இருப்பதால் வேயும் பொருட்களின் ஒளி ஊடுருவும் தன்மை பேணப்படும்.

05. வேயும் பொருட்களின் ஆயுட் காலம் மற்றும் உறுதித் தன்மை
வேயும் பொருட்களின் ஆயுட்கால் மற்றும் உறுதித் தன்மை அதிகரிப்பதனால் நீண்ட காலத்திற்கு ஆளுகை இல்லங்களில் பயிர்களை வளர்க்க முடியும். இதனால் பயிர்ச் செய்கைக்கு செலவாகும் மூலதனம் குறையும்.

06. ஆளுகை இல்லம் நிருமாணிக்கப்படும் பிரதேசத்தின் காலநிலை காரணிகள்
நிருமாணிக்கப்படுகின்ற பிரதேசத்திற்கு உரிய காலநிலைக் காரணிகளை தாங்கக்கூடிய வேயும்பொருட்கள் பயன்படுத்துவதன் மூலம் அவற்றின் ஆயுட்காலத்தை மற்றும் ஏற்படக்கூடிய பொறிமுறைச் சேதங்களை குறைத்துக் கொள்ள முடியும்.
உதா : வேகமான காற்று, அதிக ஈரப்பதன், அதிக சூரிய ஒளி

07. வேயு பொருட்கள் விலை, தரம் மற்றும் நீடித்து உழைக்கக் கூடியதாக இருத்தல்.
விலை குறைவான, தரம் மற்றும் நீடித்துழைக்கும் தன்மை அதிகமான வேயும் பொருட்களை ஆளுகை இல்லத்தை நிருமாணிக்க பயன்படுத்துவதால் செலவாகும் மூலதனத்தை குறைத்துக் கொள்ள முடியும்.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 04 x 06 புள்ளி =24 புள்ளிகள்**
**விடயங்களை விவரித்தல் 04 x 14 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

07.(c) பின்வரும் நிலம்பண்படுத்தல் உபகரணங்களின் விசேட இயல்புகள் மற்றும் பயன்பாடுகளை விவரிக்குக.

(i) இறகு கலப்பை (அச்சுத்தகட்டுக் கலப்பை)

(ii) வட்டத்தட்டுக் கலப்பை

(iii) கீழ்மண் கலப்பை

**அறிமுகம்**

நிலத்தை தயார்படுத்துவதை இலகுவாக்குவதற்கு பயன்படுத்தும் உபகரணங்கள் நிலப்பண்படுத்தல் உபகரணங்கள் எனப்படும்.

1. **இறகுக் கலப்பை**

**விசேட இயல்புகள்**

01. மண்ணை வெட்டுதல் தளர்த்துதல் புரட்டுதல் மற்றும் புற்கள் மூடப்படும் விதத்தில் மண் பாளமானது அடுத்த பக்கம் புரட்டப்படுதல்.

02. கலப்பை அலகின் கீழ்ப் பகுதியினால் மண் வெட்டப்படுவதோடு அதன் மேல் உள்ள வளைவான அச்சுத் தகட்டின் மூலம் மண் பாளம் புரட்டப்படும்.

03. வளைவான அச்சுத் தகட்டின் வடிவத்தை மாற்றுவதன் மூலம் மண்ணை உடைக்கும் விதத்தை மாற்ற முடியும்.

04. உழும் ஆழத்தை / மண்ணை வெட்டும் ஆழத்தை திரக்டரின்ட நீரியல் தொகுதி மூலம் கட்டுப்படுத்தலாம்.

05. பயிரின் வகைக்கேற்ப வெட்டும் ஆழத்தை செப்பஞ் செய்து கொள்ளலாம்.

**பயன்பாடு**

01. ஆழமான முதற் பண்படுத்தலின்போது பயன்படுத்தப்படும்.
02. ஆழமான நிலப்பண்படுத்தலில் பயன்படுத்த முடியும்.
03. ஈர மண்ணில் பயன்படுத்த முடியும்.
03. புற்களைக் கொண்ட தரைகளிலும் பயன்படுத்தலாம்.
04. வரம்புசால் அமைப்பதற்குப் பயன்படுத்தப்படும்.

2. **வட்டத்தட்டுக் கலப்பை**

**விசேட இயல்புகள்**

01. சேற்றுப்பாங்கான, ஒட்டுந்தன்மையுள்ள மற்றும் கல், முள் கொண்ட கரட்டுத்தன்மையான நிலத்திலும் பண்படுத்த முடியும்.

02. வட்டத்தட்டுத் தொகுதிக்கு கற்கள், முட்கள் சிறைப்பட்டு, தட்டுக்கு சேதம் ஏற்படாத விதத்தில் தொகுதியின் தட்டுக்கள் சுழற்றப்பட்டு, மேல் செல்வதால் வட்டத்தட்டுகள் பாதுகாக்கப்படும்.

03. தட்டு வெட்டும் கோணத்தை நிலைக்குத்தாகவும் கிடையாகவும் செப்பஞ்செய்து மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

04. எந்த வகையான மண்ணிலும் பயன்படுத்த முடியும்.

**பயன்பாடு**

01. முதற் பண்படுத்தலுக்காகப் பயன்படுத்தக் கூடியதாக இருத்தல்.
02. தகட்டினால் மண்ணைப் பாளங்களாக வெட்டிப் புரட்டக்கூடியதாக இருத்தல்.

3. **கீழ்மண் கலப்பை**

**விசேட இயல்புகள்**

01. கீழ்ப் பகுதியில் கூரான அமைப்பைக் கொண்டிருப்பதனால் மண்ணின் கீழான பகுதி வரை கொண்டு செல்லாம்.

02. கலப்பையின் முனையில் கூரான பகுதி இணைக்கப்பட்டுள்ளது.

03. நான்கு சக்கர இயந்திரத்தின் முப்புள்ளியில் இணைக்கலாம்.

04. இதனை இயக்குவதற்கு அதிக வலுத் தேவைப்படும்.

**பயன்பாடு**

01. முதன் பண்படுத்தலின் போது பயன்படுத்தப்படும் உபகரணமாகும்.
02. மண்ணினை ஆழமாக உழுவதற்குப் பயன்படுத்தப்படும்.
03. கீழ் மண்ணை மேல் எடுக்காது கடினப்படையை உடைக்கலாம்.

**அறிமுகம் 10 புள்ளிகள்**
**விசேட இயல்புகள் ஒவவொன்றிலும் இரண்டைக் குறிப்பிடல் 02 x 03 புள்ளி =18 புள்ளிகள்**
**விசேட இயல்புகள் ஒவவொன்றிலும் இரண்டை விவரித்தல் 02 x 07 புள்ளி =42 புள்ளிகள்**
**பயன்பாடு ஒவ்வொன்றிலும் ஒன்றைக் குறிப்பிடல் 01 x 03 புள்ளி =09 புள்ளிகள்**
**பயன்பாடுகைள ஒவவொன்றிலும் ஒன்றை விவரித்தல் 01 x 07 புள்ளி =21புள்ளிகள்**
**மொத்தம் =100 புள்ளிகள்**

08. (a) இலங்கையில் அதிகளவில் காணப்படும் அரிமரம் அல்லாத வனம்சார்ந்த உற்பத்திகளை அவற்றின் பயன்பாடுகளுடன் குறிப்பிடுக.

**அறிமுகம்**

காடுகளில் இருந்து பெற்றுக் கொள்ளக்கூடிய உயிரியல் ரீதியான அரிமரம் சாராத உற்பத்திகள், அரிமரம் அல்லாத வனம்சார்ந்த உற்பத்திகள் எனப்படும்.

| உற்பத்தி | பயன்பாடு |
|---|---|
| 01. மூலிகைத் தாவரங்கள்<br>மரமஞ்சள், வேம்பு, வெண் சந்தனம்<br>நில வேம்பு | மருந்துகள் |
| 02.தேன் | உணவாக, மருந்து |
| 03. கிழங்கு வகைகள் | உணவாக |
| 04.பழம் மற்றும் காய்வகைகள்<br>காட்டு மாங்காய், புளி,<br>வீர, பாலை | உணவாக |
| 05. வித்து வகைகள்<br>பலா வித்து | உணவாக |
| 06.பிரம்பு | தளபாடங்கள், அலங்காரப் பொருட்கள் உற்பத்தி |
| 07.மூங்கில் | கடதாசி உற்பத்தி, மறைப்புதிரை, காபட் |
| 08. கித்துள் பதநீர் | கள்ளுற்பத்தி, கருப்பட்டி உற்பத்தி, பாணி உற்பத்தி |
| 09. இலைக்கன் | உணவாக |
| 10. பன்னங்கள் | உணவாக, அலங்காரத்திற்கு |
| 11. கித்துள் மா | உணவாக |
| 12. பால் | நீரிழிவுக்கு மருந்தாக |
| 13. ரெசின்<br>பைனஸ் | நிற பூச்சுக்கள், பசை, ஒப்பனை பொருட்கள்,<br>வாசணைத் திரவியங்கள், மருந்து |
| 14. விறகு | எரிபொருளாக |

| | |
|---|---|
| 15.பூ இதழ் / இலை / பழம் /<br>தண்டின் நடுப்பகுதி /<br>வேர்த்தண்டுகிழங்கு /<br>பட்டை | நிறப் பொருள் தயாரிப்பு |
| 16.பாசி | மருந்துக்காக |
| 17.வேட்டையாடிய இறைச்சி | உணவாக |
| 18.மேய்ச்சல் மற்றும் வெட்டும் புல் | விலங்கு உணவாக |
| 19.மீன்கள் | உணவாக, அலங்காரத்திற்கு |
| 20.பீசின்<br>பெருங்காயம் | நுண்ணுயிர் கொல்லிகளாக |
| 21.விலங்கு நார் | தூரிகை உற்பத்தி |
| 22.விலங்கு தந்தம் | அலங்காரம் |
| 23.விலங்கு எலும்பு பகுதிகள் | மருந்தாக, அலங்காரம் |

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**உற்பத்தியை குறிப்பிடல் 10 x 04 புள்ளி =40 புள்ளிகள்**
**பயன்பாட்டை குறிப்பிடல் 10 x 04 புள்ளி =40 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

08. (b) தென்னஞ் சிரட்டைகளைப் பயன்படுத்தி ஏவப்பட்ட (active carbon) காபனைத் தயாரிக்கும் கோட்பாடு மற்றும் ஏவப்பட்ட காபனின் பிரதான பயன்பாடுகளை விவரிக்குக.

**அறிமுகம்**

ஈர்த்து வைப்பதற்கு அல்லது இரசாயன தொழிற்பாட்டிற்கு இலகுவான விதத்தில் குறைந்த விட்ட பருமனுடன் காணப்படுகின்ற காபன்கள் ஏவப்பட்ட காபன்கள் எனப்படும்.

**கோட்பாடு**

தென்னஞ்சிரட்டைகளை குறைந்த ஒட்சிசன் வாயு நிலைமை சூழலில் 600 - $900^0$C உயர் வெப்பநிலைகளின் கீழ் தகனமடைதல் (Pyrolysis) ஆகும்.

**பயன்பாடு**

01. வாயு (gas) மற்று வளியினை வடிப்பதற்கு
    - வாயு நிலையிலுள்ள சேதனப் பதார்த்தங்களை அகற்றுதல்

02. பான வகைகள் உற்பத்தியின்போது பாவனைக்கெடுக்கப்படும் நீரிலுள்ள குளோரினை அகற்றுவதற்கு

03. மருந்து உற்பத்தியின் போது
    - வில்லைகள் அல்லது மூடிக்குளிசைகள் (Capsule) ஆக ஏவப்பட்ட காபன் பயன்படுத்தப்படுகின்றது. உதா : வயிற்றோட்டம் போன்ற நோய்களுக்கு

04. பானவகை உற்பத்தி செயன்முறையின் போது,
    - தேவையற்ற நிறங்கள், சுவை மற்றும் மணம் அகற்றப்படும்.

05. தங்கச் சுரங்கங்களிலிருந்து தங்கம் பிரித்தெடுப்பதற்கு

06. அணுச்சக்தி உற்பத்திச் செயற்பாட்டில் வெளியேற்றப்படும் கதிர்ப்பு பதார்த்தங்களின் சேதத்தன்மையை குறைக்கலாம்.

07. கழிவுப்பொருள் சுத்திகரிப்பு
    - நகர்ப்புற மற்றும் தொழிற்சாலை கழிவுநீரிலுள்ள கழிவுகள் அகற்றப்படல் (பார உலோகம், வாயுநிலை கழிவுகள், சேதனப் பதார்த்தங்கள், நிறப்பொருட்கள்)

08. இரசம் அகற்றப்படுதல்
    - நீர் முதல்களில் காணப்படும் இரசம், வாயு நிலையிலுள்ள இரச துணிக்கைகள் என்பவற்றை ஈர்த்து வைத்து அகற்றப்படும்.

09. ஒளிப்பிரதி எடுக்கும்போது உருவாகும் $O_3$ வாயுவினை அகத்துறிஞ்சுவதற்கு (இவ்வியந்திரத்தில் ஏவப்பட்ட காபன் வடிகள் பூட்டப்பட்டுள்ளன)

10. குடிநீர் சுத்திகரிப்பு

11. பரம்பியுள்ள பதார்த்தங்களை சுத்திகரிப்பதற்கு (எண்ணெயில் பரம்பியுள்ள)

12. விலங்கு வளர்ப்பில் பீடைநாசினியாக

| | |
|---|---|
| **அறிமுகம்** | **20 புள்ளிகள்** |
| **கோட்பாடு** | **20 புள்ளிகள்** |
| **பயன்பாட்டைக் குறிப்பிடல் 06 x 03 புள்ளி** | **=18 புள்ளிகள்** |
| **பயன்பாட்டை விளக்கல் 06 x 07 புள்ளி** | **=42 புள்ளிகள்** |
| **மொத்தம்** | = 100 **புள்ளிகள்** |

08. (c) செயன்முறைகளைத் தன்னியக்கமயப்படுத்தும்போது செய்நிரலாக்கத் தருக்கக் கட்டுபாட்டு முறைமை (Programmable Logic Control - PLC) மற்றும் நுண் கட்டுப்பாட்டு முறைமை (microcontroller system) ஆகியவற்றுக்கிடையிலான வேறுபாடுகளைப் பட்டியலிடுக.

**அறிமுகம்**

கைத்தொழிற்துறையில் மின்னியந்திர தொழிற்பாட்டில் தன்னியக்கமயப்படுத்தும்போது செய்நிரலாக்க தருக்க கட்டுப்பாட்டு முறை மூலம் முறைமைப்படுத்தப்பட்டு தொழிற்படுத்தக்கூடிய இலக்க கணனிதொகுதி செய்நிரல் தருக்க கட்டுப்படுத்தி எனப்படும்.

மின்னியந்திர தொழிற்பாடுகள் தன்னியக்கமயப்படுத்துவதற்கு அடிப்படையாக கணனி பகுதி நுண்கட்டுப்பாட்டு தொகுதி (Micro chip) னுள் உள்ளடக்கப்பட்ட தொகுதி நுண்கட்டுப்பாட்டு முறைமை எனப்படும்.

| செய்நிரல் தருக்க கட்டுப்படுத்தி | நுண்கட்டுப்பாட்டு முறைமை |
|---|---|
| 01. கைத்தொழிற்துறையில் இயந்திர உபகரணங் களைக் கட்டுப்படுத்துவது போன்ற மின் பொறியியல் தன்னியக்க வாக்க கட்டுப்பாட்டுக்கு பயன் படுத்தக் கூடிய கட்டுப்பாட்டுத் தொகுதியாகும் | 01. விளையாட்டுப் பொருட்கள் போன்ற சிறிய இலத்திரனியல் உபகரணங்களில் பயன்படுத்தக் கூடிய தொகுதியாகும். |
| 02. பட இடைமுகப்பொன்றின் மூலம் இலகுவாக செய்நிரலாக்கம் செய்யலாம். | 02. செய்நிரற்படுத்தல் சிறிது கடினம், இதற்கு கணினி செய்நிரல் மொழிகள் தொடர்பான அறிவு இருத்தல் வேண்டும். |
| 03. செய்நிரலாக்கத்திற்குரிய வீச்சினால் பயன்பாடு மட்டுப்படுத்தப்பட்டுள்ளது | 03. அடிப்படை செய்நிரல் மொழியொன்றின் மூலம் எல்லையில்லாத பெரிய வீச்சில் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்த முடியும். |
| 04. கரட்டுத்தன்மைக்கு பயன்படுத்த முடியும் | 04. கரட்டுப் பாவனைக்கு சற்று கடினமாது. |
| 05. விலை அதிகம் என்பதால் சிறு இலத்திரனியல் உபகரணங்களில் பயன்படுத்த முடியாது. | 05. தயாரிப்பதற்கு செலவாகும் பணம் குறைவு என்பதால் மிகவும் சிறிய அளவு உற்பத்திக்கு பயன்படுத்தலாம் |
| 06. வெளிச்சூழல் காரணிகளால் கட்டுப்படுத்தியின் சமிக்ஞைகளின் தொழிற்பட்டுக்கு ஏற்படக்கூடிய தாக்கம் குறைவு | 06. புறச்சூழல் காரணிகளினால் சமிச்ஞை தொழிற் பாட்டிற்கு ஏற்படும் தாக்கம் ஒப்பிட்டளவில் அதிகம். |
| 07. நீடித்துழைக்கும் தன்மை அதிகம் | 07. நீடித்துழைக்கும் தன்மை குறைவு |
| 08. முன்னேற்றப்பட்ட பிரதான சுற்றுக்களை உள்ளடக்கியது | 08. பிரதான, பிரதானமற்ற சுற்றுக்களுக்கு மேலதிகமாக இணைக்கப்படல் வேண்டும். |

**அறிமுகம் - இரண்டு 02 x 10 புள்ளி 20 புள்ளிகள்**
**வேறுபாடுகள் 05 x 16 புள்ளி =80 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

09.(a) தர முகாமைத்துவ முறைமை என்ற வகையில் சிறப்பான விவசாய நடைமுறைகளின் முக்கியத்துவத்தினை விளக்குக.

**அறிமுகம்**

பாதுகாப்பான மற்றும் சுகாதார ரீதியான உணவு மற்றும் உணவல்லாத உற்பத்திகளை பெற்றுக் கொள்வதற்கு சூழல்நேயமான பொருளாதார ரீதியில் இலாபகரமான சமுகரீதியில் ஏற்றுக் கொள்ளப்பட்ட செயற்பாடுகள் சிறப்பான விவசாய நடைமுறைகள் எனப்படும்.

1. பேண்தகு நிலையில் பயிர் செய்கை பண்ணப்பட முடியும்
 தரமான நீர் பாவனையினால் நுண்ணங்கித் தொற்று குறைவதோடு நீண்ட காலம் தேவையான நீரினை வழங்க முடியும்.
2. சுகாதார ரீதியான உணவினை உற்பத்தி செய்து கொள்ள முடியும்
 சேதன, முதிர்ச்சியடைந்த விலங்குப் பசளை பயன்படுத்துவதால் இரசாயன பசளைப் பாவனை குறையும்.
3. தொழிலாளர்களின் சுகாதார நிலைமை மற்றும் ஆரோக்கியத்தை பேணும் முகமாக உணவிற்கு கழிவுப் பொருட்கள் சேருதல் தடுக்கப்படும்.
 நுண்ணங்கித் தொற்று
4. உற்பத்தி வினைத்திறன் அதிகரித்தல்
 ஆரோக்கியமா தொழிலாளர்களைப்பயன்படுத்துவதன்மூலம்உற்பத்திதொழிற்பாடுகள், இடத்தின்தொழிற்பாடுகள் வினைத்திறனாகும்.
5. சுகாதார வசதிகள் வழங்கப்படல்
 பயன்படுத்துவதற்குரிய தரமான நீர், மலசலகூட வசதிகள் மற்றும் சுகாதார வசதிகள் மூலம் உணவினுள் நுண்ணங்கிகள் செல்வது குறைக்கப்படும்.
6. சுகாதார ரீதியான தொழில்சார் இடம்
 சுத்தமான பாத்திரங்களில் அறுவடையை சேகரிப்பதற்கு பயன்படுத்துவதால் அறுவடைக்குப் பிந்திய இழப்பு குறையும்.
 - பொறிமுறைச் சேதம், நுண்ணங்கித் தொற்று
7. சூழல் மாசடைவது குறைக்கப்படும்
 விலங்கு உற்பத்தி தொழிற்சாலைகளில் கழிவுப் பொருட்கள் சிறந்த முறையில் முகாமைத்துவம் செய்யப்படும்.
 - கூட்டெரு, உயிர்வாயு உற்பத்தி மூலம்
8. சுகாதார ரீதியான பொதியிடல்
 சுகாதார ரீதியாக களஞ்சியப்படுத்துவதனால் பொறிமுறைச் சேதம் மற்றும் துணைத் தொற்றுக்கள் ஏற்படுவது குறைக்கப்படும்.
 - சுத்தமான பாத்திரங்கள் பயன்படுத்துதல் - பொருத்தமான பொதியிடு பொருட்களை பயன்படுத்தல்
9. சந்தையில் உணவிற்கு அதிக சந்தை பெறுமதி கிடைக்கும்
 விவசாய இரசாயனங்கள் குறைவு என்பதால்
10. சுகாதார ரீதியான போக்குவரத்து
 போக்குவரத்தின் போது அறுவடைக்குப் பிந்திய இழப்பு குறையும்
 - பொருத்தமான பொதியிடு பொருட்கள் பயன்படுத்துதல்
 - பொருத்தமான போக்குவரத்து ஊடகங்களை பயன்படுத்தல் - பொருத்தமான நேரத்தில் கொண்டு செல்லல்
11. உணவு உற்பத்திக்காக தரமான மூலப்பொருட்களை வழங்க முடிதல்
 - தொழிலாளர்களின் சுத்தம், பொருத்தமான இயந்திர உபகரணங்களின் பயன்பாட்டினால்

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**விடயங்களை குறிப்பிடல் 08 x 03 புள்ளி =24 புள்ளிகள்**
**விடயங்களை விளக்கல் 08 x 07 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

09.(b) தானியங்கி (Automobile) எஞ்ஜின்களுக்கெனப் பயன்படுத்தப்படும் உராய்வுநீக்கி எண்ணெய்களின் தொழிற்பாடுகள் மற்றும் இயல்புகளை விவரிக்குக.

**அறிமுகம்**

உராய்வு நீக்கி எண்ணெய் என்பது இயங்கும் உலோகப் பாகங்களுக்கிடையே தொடுகையின் போது ஏற்படும் உராய்வைக் குறைத்து மிருதுவான தன்மையை ஏற்படுத்தக்கூடிய பதார்த்தங்கள் ஆகும்.

**தொழிற்பாடு**

01.இயந்திரத்தில் இயங்கும் , அசையும் பகுதிகளிடையே அழுத்தமான தன்மையை ஏற்படுத்துதல்.
- உருளை மற்றும் பிஸ்ரன் இடையில்

02.இயங்கும் பகுதிகளுக்கு இடையே உராய்வை இழிவாக்கல்
- பிஸ்ரன் மற்றும் உருளைக்கிடையில்

03.உராய்வின்போது உருவாகும் தேய்வடையும் துகள்களை சேகரித்தல்
- உலோகப் பகுகள் மற்றும் நுண்ணிய துணிக்கைகள் வந்தடைவதால் உட்பகுதியினுள் தடைகள் ஏற்படுவது குறையும்

04.தேய்மானத்திற்கு எதிராக செயற்படல்
- உராய்வு நீக்கி மூலம் மேற்பரப்புக்கள் ஒன்றைஒன்று மோதிக்கொள்வது குறைக்கப்படுவதால் தேய்மானம் குறையும்

05.எஞ்ஜினுள் காணப்படும் பகுதிகளின் துருப்பிடித்தலைத் தவிர்த்தல்.
- உராய்வு நீக்கி காரணமாக எஞ்ஜினின் உட்பகுதி $O_2$ உடன் தொடர்புபடுதல் தவிர்க்கப்படும்/மறைப்பாக தொழிற்படுதல்

06.உருளை மற்றும் பிஸ்ரனுக்கு இடையே முத்திரையிடு பொருளாக தொழிற்படல்
- உருளையினுள் அமுக்கததை ஏற்படுத்துதல்

**இயல்புகள்**

01.தடிப்பு தன்மை /பிசுபிசுக்கும் தன்மை (பாகுநிலை)
- கியர் பெட்டி/நீரியல் தொகுதி என்பவற்றிக்கு பயன்படுத்தப்படும் உராய்வு நீக்கிகளின் தடிப்பு அதிகமாக இருத்தல்
- உராய்வு நீக்கியும் இது பாகுத்தன்மை அதிகம்

02. குறைந்தளவு உறையும் இயல்புடையது.
- குறைவான வெப்பநிலையிலும் உறையும் தன்மை குறைவு.

03. ஒட்சியேற்றத்தை தடுக்கும் இயல்பு
- உலோகப் பகுதிகள் மறைக்கப்பட்டிருப்பதால்

04. எஞ்ஜினுள் வெப்பநிலையை மாறாது பேணல்.
- உராய்வு நீக்கி மூலம் மேற்பரப்பு தொடுகையுறுவது தடுக்கப்படுவதால் மோதுகை குறையும்
- உராய்வு நீக்கி மூலம் வெப்பம் அகத்துறிஞ்சப்படுவதனால் வெப்பநிலை கட்டுப்படுத்தப்படும்

05. திரவ உறுதிநிலை
- உயர்/தாழ் வெப்பநிலைகளில் நீரியல் திரவ இயல்பு மாற்றமடையாதிருப்பதனால் உறைதல், மற்றும் ஆவியாதல் நிகழ்வது குறையும்

| | | |
|---|---|---|
| **அறிமுகம்** | | **20 புள்ளிகள்** |
| **தொழிற்பாடுகளை குறிப்பிடல்** | **04 x 03 புள்ளி** | **=12 புள்ளிகள்** |
| **தொழிற்பாடுகளை விளக்கல்** | **04 x 07 புள்ளி** | **=28 புள்ளிகள்** |
| **இயல்புகளைக் குறிப்பிடல்** | **04 x 03 புள்ளி** | **=12 புள்ளிகள்** |
| **இயல்புகளை விளக்கல்** | **04 x 07 புள்ளி** | **=28 புள்ளிகள்** |
| **மொத்தம்** | | **= 100 புள்ளிகள்** |

09.(c) இருட்டுக்கு உணர்திறன் கொண்ட இலத்திரனியற் சுற்றொன்றின், எளிமையான சுற்று வரிப்படத்தை வரைந்து, தாவர இல்லத்துக்குக் கிடைக்கும் ஒளியைக் கட்டுப்படுத்துவதற்கென 230 V மின்குமிழ்த் தொடரொன்றைத் தொழிற்படச் செய்வதற்கு, இந்த எளிய சுற்றில் மேற்கொள்ளப்பட வேண்டிய மாற்றங்களை வரைந்து காட்டுக.

இருளுக்கு உணர்திறன் காட்டும் எளிய சுற்று வரிப்படம்




**கூறுகள் 05 x 08 புள்ளி =40 புள்ளிகள்**
**அவற்றினை சரியாக தொடர்புபடுத்தல் = 10 புள்ளிகள்**

பிரயோக ரீதியில் பயன்படுத்தக்கூடிய குறைந்த கூறுகளை கொண்ட சுற்று




**கூறுகள் 06 x 08 புள்ளி =48 புள்ளிகள்**
**அவற்றினை சரியாக தொடர்புபடுத்தல் = 12 புள்ளிகள்**

குறிப்பு – மேற்காட்டப்பட்ட வரிப்படங்களில் ஏதாவது ஒன்று இருத்தல் போதுமானது

230 V தொடர் மின் குமிழ்களுக்கு செய்ய வேண்டிய மாற்றங்கள்




**சரியான மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தால் =40 புள்ளிகள்**
**திரான்சிஸ்ரர் காட்டப்பட்டிருந்தால் = 10 புள்ளிகள்**
**(மேற்காட்டப்பட்ட வரிப்படங்களில் ஏதாவது ஒன்றை பயன்படுத்தமுடியும்**

10. (a) தரையலங்கரிப்பின் நன்மைகளை விவரிக்குக.

**அறிமுகம்**

வீட்டுத்தோட்டத்தில் அல்லது ஏதாவது ஒரு இடத்தில் ஈர்க்கக்கூடிய வகையில் அந்த நிலத்தை மாற்றுவது, அலங்கரிப்பதற்கு தாவரங்களை மற்றும் கட்டமைப்புக்களை சேர்த்தல் தரை அலங்கரிப்பு எனப்படும்.

**தரையலங்கரிப்பின் நன்மைகளாவன,**

01. யாதுமொரு இடத்தின் நிலத்தின் பெறுமதியை அதிகரித்தல்
குறித்த ஓர் ஒழுங்கிற்கமைய அலங்கரிக்கப்பட்ட இடத்திற்கு, மேலதிக பெறுமதியை வழங்கலாம்

02.யாதுமொரு நிறுவனம் / முற்றம் / பிரபல்யமான இடத்தினை அலங்காரமான இடமாக ஆக்க முடியும்
இதன்போது வரலாற்று, கலச்சார, மத, வர்த்தக, சமூக முக்கியத்துவங்கள் வெளிக்காட்டும் விதத்தில், பிரதேசத்தினை அலங்கரிக்க முடியும்.

03.உள மற்றும் உடல் ரீதியான சுகத்தினை (Horticulture Therapy) பெற்றுக் கொள்ள முடியும்
அபிவிருத்தியடையும் உலகில் மனிதன் இயற்கை சூழலிருந்து அப்பாற்பட்டிருப்பதால் மற்றும் அதிக வேலைப்பளு காரணமாக உள மற்றும் உடல் ரீதியாக சோர்வடைந்துள்ளமையை தவிர்த்து கொள்ளலாம்.

04.நிலத்தில் உயர்ந்த வினைதிறனை பெற்றுக்கொள்ளும் விதத்தில் அமைக்ககூடியதாகவிருத்தல்
நிலத்தின் தன்மை, ஒளியினளவு பெறக்கூடிய விதத்தினை கருத்தின் கொண்டு தாவரங்கள் மற்றும் ஏனைய கூறுகளினை நிலைப்படுத்துவதால் உயர் வினைதிறனுடன் பயன்படுத்த முடியும்.

05.ஏதாவது ஓரிடத்தில் காணப்படும் அலங்கோலமான பகுதிகளை மறைக்க முடியும்.
யாதுமோரிடத்தில் இருக்கும் அழகிற்கு பாதகமாக அமையும் மலசலகூடம், காற்று வேகமாக வீசும் இடம் போன்றவற்றில் கூறுகளை பயன்படுத்தி மறைப்பிட முடியும்

06.வாழும் சுற்று சூழலை பாதுகாப்பான, சுத்தமான, ஆபத்துக்கள் குறைந்த சூழலாக மாற்ற முடிதல்.
இதனால் வாழும் சூழல் மிகவும் அழகாக அமைவதோடு வீட்டில் வசிப்பவர்களின் மனஅமைதி உயரும்.
முறையான நிலப் பயன்பாட்டினால் வீட்டில் வசிப்பவர்களின் பாதுகாப்பு உறுதிப்படுத்தப்படுகின்றது.

07.விசேட இடங்களுக்கு அதன் முக்கியத்துவத்தை பிரதிபலிக்கச் செய்தல்.
இதன் மூலம் சுற்றுல பயணிகளை ஈர்ப்பதனை முன்னேற்ற முடியும்.

08.தொழில் வாய்ப்புக்களை உருவாக்குவதன் மூலம் நாட்டில் பொருளாதார முன்னேற்றத்திற்கு பங்களிப்புச் செய்யலாம்.
கட்டட நிர்மாணிப்பாளர்கள், திட்டமிடுபவர்கள், மென்பொருள் மற்றும் வன்பொருள் வழங்குனர்கள் மற்றும் பூந்தோட்ட பராமரிப்பு வேலைகளில் ஈடுபடுவர்களுக்கு சுயதொழில் வாய்ப்புக்கள் என்பவற்றை பெருமளவு உருவாக்கலாம்.

09.நகர சனத்தொகை அதிகமான சூழலிலும் இயற்கை தன்மையை உணர முடியும்.

10.குறித்த இடத்தில் இருக்கும் தாவரங்கள், செடிகள் பராமரிப்பது இலகுவாதல் மற்றும் அவற்றின் பயன் பாடுகளை பெற முடிதல்.

11. ஒலினால் சூழல் மாசடைதல் கட்டுப்படுத்தப்படும்

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**நன்மைகளை குறிப்பிடல் 08 x 03 புள்ளி =24 புள்ளிகள்**
**நன்மைகளை விளக்கல் 08 x 07 புள்ளி =56 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

10. (b) தூய்தான உற்பத்திச் செயன்முறையின் (cleaner production process) பிரதான படிமுறைகளை விவரிக்குக.

**அறிமுகம்**

தூய்தான உற்பத்திச் செயன்முறை என்பது, உற்பத்திச் செயன்முறையில் உற்பத்தி மற்றும் சேவையினை வினைத்திறனாக முன்னேற்றுவதற்கு மற்றும் சூழலுக்கும் மனிதனுக்கும் காணப்படும் அச்சுறுத்தல்களைக் குறைப்பதற்கும் செய்யப்படும் ஒன்றிணைந்த உபாய முறைகளின் தொடர்ச்சியான பாவனையாகும்.

**தூய்தான உற்பத்திச் செயன்முறையின் பிரதான படிமுறைகள் வருமாறு.**

1. நுகர்வு தொடர்பாக ஆவணங்களை வைத்திருத்தல்

இதன் போது பொருள்கள் மற்றும் வலுச் சக்திகளின் பாய்ச்சல் தொடர்பாக அடிமட்டப் பகுப்பாய்வு நடாத்துவது அவசியமாகும்.
உதா : Sankey diagram மூலம்

2. குறிகாட்டிகளைப் பயன்படுத்தலும் கட்டுப்படுத்தலும்

இங்கு உற்பத்திச் செயன்முறையின் பல்வேறு அவதிக்கட்டுப்பாட்டுப் புள்ளிகளின் (Critical Control Points) அதற்கே உரிய பெறுமானங்கள் (Reference value) வழங்கப்பட்டு பல்வேறு குறிகாட்டிகள் பயன்பாட்டின் மூலம் அவற்றின் எல்லைகள் மாறும் சந்தர்ப்பங்கள் தெரிந்து கட்டுப்படுத்துவதற்கு வழிமுறைகள் செய்தல் வேண்டும்.

3. மூலப்பொருட்கள் மற்றும் மேலதிக பொருட்களைப் பிரதியீடு செய்தல்

உற்பத்திச் செயன்முறையில் பயன்படுத்தப்படும் பிரதான மற்றும் வேறு மூலப்பொருட்கள் செயன்முறையில் வினைத்திறனைக் குறைப்பதற்கு காரணமாக அமையும் போது / அச்சுறுத்தலாக அமையும் கழிவுலுப் பொருட்களை சூழல் நேயமான விதத்தில் வினைத்திறனான செயற்பாட்டினை நிகழ்த்துவதற்கு உதவும் பொருட்களுக்கு பிரதியீடு செய்தல்.

உதா : மின்னோட்டத்மைப் பெற்றுக்கொள்ளும் முகமாக உயிர்ச் சுவட்டு எரிபொருளுக்குப் பதிலாக சூரிய சக்தி போன்ற புதுப்பிக்கத்தக்க சக்தி வளங்களை பயன்படுத்தல்.

4. மேலதிக மூலப் பொருட்கள் பயன்படுத்துவதற்குரிய காலத்தை மேம்படுத்தும் போது மற்றும் தயார் செய்யும் போது ஏற்படும் நோய் நிலைமைகளைத் தவிர்த்தல்.

உற்பத்திக்குப் பயன்படுத்தும் பிரதான மூலப்பொருட்கள் மற்றும் செயன்முறையின் போது பயன்படும் பொருட்கள் (தொற்றுநீக்கிகள், சக்தி வகைகள் போன்றன) தொழிலாளர்கள் மற்றும் சுற்றுச் சூழலுடன் தொடர்புறும் போது ஏற்படக்கூடிய நோய் நிலைமைகளைக் குறைப்பதாகும்.

உதா : கசிவு மற்றும் சிந்துதலைக் குறைப்பதற்கு இயன்றளவு நச்சுத்தன்மை குறைவான மூலப் பொருட்களைப் பயன்படுத்தல்

5. முகாமையை மேம்படுத்தலும் தன்னியக்கவாக்கலும்

நல்ல முகாமைத்துவம் மூலம் தொழிலாளர்களுடைய வினைத்திறனை அதிகரிக்க முடிவதோடு தன்னியக்கவாக்கல் மூலம் உழைப்புத் தேவைக்குத் தீர்வாக அமைவதோடு தனிநபர்களுடைய குறைபாடுகளையும் குறைத்துக் கொள்ள முடியும்.

6. நிறுவனத்தின் உள்ளே மற்றும் வெளியே மூலப்பொருட்களை மீளப் பயன்படுத்தல்.

இங்கு சேரக்கூடிய மூலப்பொருட்கள் உற்பத்திச் செயன்முறையின்போது மீளப் பயன்படுத்துவதற்கு அல்லது நிறுவனத்துக்கு உள்ளேயே வேறு தேவைக்காகவும் பயன்படுத்த முடியும்.

7. கழிவுப் பொருட்கள் குறைந்த புதிய தொழிநுட்ப செயன்முறைகளைப் பயன்படுத்தல்

இதன் போது கழிவுப் பொருட்கள் உருவாகும் மற்றும் வெளியேற்றப்படும் அளவினைக் குறைக்கும் தொழிநுட்பத்தினை மற்றும் தயாரிப்புச் செயன்முறையை ஒழுங்கிணைந்து சீரமைத்தல்.

**அறிமுகம் 20 புள்ளிகள்**
**படிமுறைகளை குறிப்பிடல் 05 x 06 புள்ளி =30 புள்ளிகள்**
**படிமுறைகளை விளக்கல் 05 x 10 புள்ளி =50 புள்ளிகள்**
**மொத்தம் = 100 புள்ளிகள்**

10. (c) வெற்றிகரமான வணிகமொன்றுக்குத் தேவையான முகாமைத்துவத் திறன்களின் முக்கியத்துவத்தை விளக்குக.

**அறிமுகம்**

வணிகம் ஒன்றில் வெளியிடப்பட்டுள்ள நோக்கங்களை அடைவதற்காக வணிகத்தில் உள்ள மனித மற்றும் ஏனைய வளங்களைத் திட்டமிடுதல், ஒழுங்கமைத்தல், நெறிப்படுத்தல் மற்றும் கட்டுப்படுத்தல் ஆகிய கருமங்களை உள்ளடக்கிய செயன்முறையை சிறந்த முறையில் கையாள்வதற்குரிய திறன் முகாமைத்துவ திறன் எனப்படும்

**வெற்றிகரமான வணிகமொன்றுக்குத் தேவையான முகாமைத்துவத் திறன்கள்**

01. நிலம், நீர், உழைப்பு, மூலதனம் மற்றும் ஏனைய அரிதான வளங்களின் மூலம் உச்ச பயனைப் பெறல்.

02. உற்பத்தி தொழிற்பாட்டினை திட்டமிடுவதன் ஊடாக வியாபாரத்தின் எதிர்கால நோக்கத்தினை அடைய இலகுவாகும்.

03. வணிக நிறுவனத்தை சிறப்பான முறையில் நிர்வகித்தலும் நல்ல முறையில் கொண்டு நடாத்துவதற்கு முடியுமாக இருத்தலும்.

04. போட்டியினையும் சவால்களையும் எதிர்கொண்டு வணிகமொன்றின் நிலைபேற்றை உறுதிப்படுத்திக் கொள்ள முடியும்.

05. வணிகம் ஒன்றில் உள்ள பலவிதமான விடயங்களை மேற்கொள்வதற்குத் தேவையான மனித, பௌதிக, மூலதன வளங்களையும் பொருத்தமான தகவல்களையும் சரியான முறையில் சரியான நேரத்தில் வழங்க முடிதல்.

06. வணிகச் சூழலில் அதிகரித்த கேள்விகளின் வேறுபாடுகளையும் அதன் காரணமாக வியாபாரத்தில் ஏற்படக்கூடிய சவால்களை அறிந்திருத்தல்.

07. மாறும் சூழுலுக்கு ஏற்ப நெகிழ்தன்மை மற்றும் புத்தாக்கம் செய்வதற்குரிய தீர்மானங்களை எடுக்க முடிதல்.

08. நிறுவனத்தில் நிகழக் கூடிய நிர்வாக ஒழுங்கமைப்பிற்கான ஒத்துழைப்பினைப் பெற்றுக் கொண்டு சிறந்த நிறுவனச் சூழலை கட்டியெழுப்ப முடிதல்.

| | | |
|---|---|---|
| **அறிமுகம்** | | **20 புள்ளிகள்** |
| **விடயங்களை குறிப்பிடல்** | **05 x 06 புள்ளி** | **=30 புள்ளிகள்** |
| **விடயங்களை விளக்கல்** | **05 x 10 புள்ளி** | **=50 புள்ளிகள்** |
| | **மொத்தம்** | **= 100 புள்ளிகள்** |